[23rd January 1961

*Block Development*

***95 Q.—Sri N. R. THIAGARAJAN :** *கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*நமது ராஜ்யத்தில் உள்ள எல்லா பிளாக்குகளிலும் 1959 ஏப்ரல் 1-ம் தேதி முதல் 1960 மார்ச் முடிய செலவான தொகை எவ்வளவு ?*

The Hon. Sri C. SUBRAMANIAM : The total expenditure was—

| | RS. |
|---|---|
| Non-Loan ... ... ... ... ... | 2,59,06,810 |
| Loan ... ... ... ... ... | 1,21,84.488 |
| Total ... | 3,80,91,298 |

**Sri N. R. THIAGARAJAN :** *பிளாக்குகளில் பணம் செலவு ஆனதில் சென்ற ஆண்டுக்கும் இந்த ஆண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறதே இதற்கு காரணம் என்ன ? சில பிளாக்குகளில் ஒதுக்கப்பட்ட பணத்திற்குமேல் செலவாகியிருக்கிறது, சில பிளாக்குகளில் ஒதுக்கப்பட்ட பணத்தில் குறைவாக செலவு செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பாக எங்கள் ஆண்டிவட்டம் பிளாக்கில் 12 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருந்தும் 2 லட்சம் ரூபாய் தான் செலவு செய்திருக்கிறார்கள். இவ்விதம் இருக்கின்ற ஏற்றத் தாழ்வுகளை நீக்க அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா ?*

**The Hon. Sri C. SUBRAMANIAM :** *இது பொதுவான ஒரு கேள்வி. தனிப்பட்ட ஒவ்வொரு இடத்தைப்பற்றியும் தனியாக கேள்வி கேட்டால் பதில் சொல்லலாம்.*

*Discourses on Ramayana and Mahabaratha*

***96 Q.—Sri S. M. ANNAMALAI :** *கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) சமுதாய நலத்திட்டப் பகுதிகளில் இராமாயணத்திலும், மகா பாரதத்திலும் நன்ருக உபந்நியாசம் செய்பவர்களுக்கு உதவி செய்யும்படி சமஸ்கிருத கமிஷன் சிபார்சு செய்துள்ளதா ?*

*(இ) அப்படியானல், அதன்மீது எடுத்த நடவடிக்கை என்ன ?*

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) and (இ) The Sanskrit Commission had recommended the employment of the exponents of Ramayana, Mahabaratha, etc., in the Blocks with a view to inculcate among the masses, the proper ideals of conduct and character. Reports on the recommendation have been called for from the Collectors of the districts and they are awaited.

23rd January 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார், ஜாதி மத பேதமற்ற சர்க்கார் என்று சொல்லப்படும் ஒரு சர்க்கார், ஒரு மதத்திற்கு என்று மட்டும் இருக்கின்ற இம்மாதிரிப்பட்ட காரியங்களுக்கு உதவி செய்வதற்கு முன் வரலாமா? அப்படியானால் இதே போன்று மற்ற எல்லா மதத்தினருக்கும் உதவி செய்ய சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : ராமாயணம், மகாபாரதம் போன்ற கதைகள்பற்றி சொல்வது மதத்தை போதிப்பதற்காக அல்ல, ஒழுக்கத்தைப்பற்றியுள்ள எண்ணத்தைப் பரப்புவதற்குத்தான்.

SRI V. K. KRISHNAMURTHY : தலைவர் அவர்களே, தமிழர்களுடைய நாகரீமும், மறுமலர்ச்சியும் கம்பராமாயணத்தில்தான் இருக்கின்ற காரணத்தினால், இது போன்ற உபந்நியாசங்களை நடத்த வலியுறுத்தவேண்டும் என்பதோடு மட்டுமல்ல, பெரிய புராணத்தையும் இதில் சேர்க்கவேண்டும் என்று சர்க்கார் ஆலோசனை கூறுமா?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு அண்ணாமலை நீங்கள் பதில் சொல்லுகிறீர்களா?

*Office of the Inspector-General of Prisons*

* 97 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the rent per month paid to the Krishna Vilas, Vepery, Madras, wherein the office of the Inspector-General of Prisons is located; and

(*b*) the basis on which the rent was fixed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 1,125;

(*b*) The fair rent was fixed by the Third Assistant Judge of the City Civil Court in accordance with the provisions of section 4 of Madras Buildings (Lease and Rent Control) Act (Act XXV of 1949).

SRI M. KALYANASUNDARAM : ஸார், இதற்கு முன்பு இந்த அலுவலகம் எந்த இடத்தில் இருந்தது? இப்போது இந்தப் புதிய கட்டிடத்திற்கு மாற்றவேண்டிய காரணம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு முன்பு ஃபஸ்ட் லைன் பீச்சிலுள்ள கட்டிடத்தில் நம்பர் 2 நார்த் பீச் போலீஸ் ஸ்டேஷனும், ஃபஸ்ட் ஃப்ளோரில் இந்த அலுவலகமும் இருந்தது. அதில் ஒன்பது பேர் (ப்ரொபேஷனர்ஸ்) இருந்து வேலை செய்ய வேண்டியிருந்தது. அவர்களுக்கு அங்கு இட வசதி குறைவாக இருந்ததினால், அவர்கள் தனித் தனி வீடுகளில் தங்கள் அலுவலகத்தை வைத்துக்கொள்ளவேண்டியிருந்தது. இதற்காக வாடகை வகையில் 1,620 ரூபாய் கொடுக்க வேண்டியிருந்தது. அதோடு சரியான முறையில் வேலை செய்வதற்கும் வசதியில்லாமல் இருந்தது. மேலும் ரயில் டிராபிக் போன்ற நெருக்கடியினாலும்